உ

திருச்சிற்றம்பலம்

# தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்



## வரலாறு

விளம்பி, மாசி மகம் நாள்

1959

திருச்சிற்றம்பலம்

# சாந்தலிங்கர் பத்து

## அவிரோதவுந்தியார்ச்சாரம்

[கு. நடேச கவுண்டர்]

சாந்தலிங்க சாந்தலிங்க சாந்தலிங்க தேசிகா
சாந்தவின்ப மேவவந்து தண்ணருள் புரிந்துகா
மாந்தரின்ப மேவமுந்து மறைகளாக மங்களின்
போந்தகொள்கை யோர்ந்துநன்கொ ருந்தியார் புகன்றவா (க)

பேறுநான்கும் வீட்டிலே பிறங்கும்ஆசை யின்மையே
பேரறம்சி வம்பொருள் பிறங்குஇன்ப பூரணம்
தேறின்மாறி லாதவின்பம் உண்மைநூல்கள் செப்புமித்
திறமறிந்து சேர்கைஞான மெனமொழிந்த தெய்வமே (உ)

எனதியான் அறுத்தபேர்மெய்ஞ் ஞானியார் புறத்திலும்
ஒய்ந்தகத்து முற்றபற் றறுக்கவென் றிசைத்தவா
மனையினல்லல் ஞானமேவு வழியடைக்கும் விட்டுமெய்
வாழ்வுதேடி ஞானவள்ள லாரைமேக என்றவா (ங)

பந்தமுத்தி சீவர்உண்மை நூலெலாம் பகர்ந்திடும்
பார்க்கின்மூன்று பொருளுமுண்டு பகரிலத்து விதமதாம்
சந்தைபோல வொன்றிரண்டு கூறிவாது செய்வது
தகுதியன்றெ னுமொழிந்து சங்கைதீர்த்த வித்தகா (ச)

உள்ளமொன்றின் அன்றியுள்ள பொருள்புலப் படாததை
உணர்ந்தபே ரனைத்தையும் முணர்ந்தபேர் அஃதுணரவே
கள்ளஇந்தி யங்களாதி நீயலாமை கண்டுமெய்
காணுமாறு வஞ்சநெஞ்சு ாக்கவென்று சொன்னவா (ரு)

பரத்திேனு டிரண்டறக் கலத்தில்நிட்டை பலபல
பரவுபன் மதத்தில்நிட்டை வேறுவேறு பகரினும்
சரதமான்ம போதமாய்கின் சம்மதம் எமக்குமாம்
சாற்றெுணு தவ்வின்பமென்று சாற்றுஞான தற்பரா (சூ)

ஆன்மபோத மாயுமாறு பாயநிட்டை ஐயனுர்
அட்டமூர்த்த மாதியாவு மாகிநின்ற தொருபெரு
மேன்மையான சோதியென்று பேதியாமை யாவெனு
விண்டுதொண்டு கொண்டஞான வித்தகா மகேச்சுர (எ)

பூரணச் சிவத்திலே பொருந்தவில்லை நெஞ்செனிற்
புன்மைதீர்த்த குருவையுட் பொருத்தியோ ரெழுத்திஞல்
வாரமாக உச்சரிக்க வென்றுபாய மோதியே
வாதைதீர்த்து நோயகற்ற வந்தஞான வைத்தியா (அ)

ஆற்றன்மிக்க அன்பதின்றி வேள்வியைந்தும் ஆற்றெுணுது
ஐந்தையும் மடக்கியன்பை யரனடிக்கு வையெனுச்
சாற்றினுய் அவ்வைந்துமென்னை நின்கண்சார ஒட்டில
தயைபுரிந்து புலனைவென்று சாருமாற்றல் தருகவே (கூ)

ஓங்குபே ரருட்பிரானெ டொன்றியானும் வாழவும்
உயிர்கள்யாவும் யானெனு வுவந்தருட்க ணிற்கவும்
ஈங்குநீ மொழிந்தவா றெமக்குமாற்றல் எய்தவும்
எம்பிரான் அளித்திஉம்பர் தம்பிரான்க்ரு பாகரா. (கய)

# தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் வரலாறு.

**முன்னுரை :—**

நமது தண்டமிழ் நாட்டின் கண்ணே தவத்தானும் ஞானத்தானும் முதிர்ந்த அருளாளர் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்கள் பிறவியெடுத்ததன் பயனைப் பெறவேண்டிய பேரா இயற்கைப் பெரு வாழ்வு பெற்றனர். பிறவியின் பயனைத் தாங்கள் எய்தியதன்றித் தம் காலத்து வாழ்ந்த மக்கள் பலரும் எய்துமாறு அவர்களுக்கு நன்னெறியை உணர்த்தியருளினர். தம் காலத்திற்குப் பின்னர் தோன்றும் மக்களும் அவற்றை உணர்ந்து கடைப்பிடிக்குமாறு நூல் வடிவிலும் ஆக்கித் தந்தனர். அவ்வருளாளர்களால் நமது நாடும், மொழியும், சமயமும் அடைந்த நன்மைகள் மிகப் பல. அத்தகைய அருளாளர்களுள் பேரூர், தவத்திரு சாந்தலிங்க அடிகளார் என்பவரும் ஒருவர். அவர்களது அருள் வரலாற்றினை அறிந்த வரை இங்குத் தருகின்றோம்.

**தோற்றமும் இளமையும் :—**

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் அவர்கள் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியவர். அவர்கள் தோன்று தற்குப் புண்ணியம் செய்தது தொண்டை நாடு என்று கருதப் படுகிறது. அடிகளாரவர்கள் வீர சைவ சமயத்தைச் சார்ந்தவர். இள வயதிலேயே நற்குண நல்லொழுக்கமுடையவராய், இறைவனிடத்தும் இறைவன் அடியாரிடத்தும் அன்பு பூண்ட வராய் விளங்கினர். இவ்விளமைப் பருவத்திலேயே சுவாமி களுக்குத் துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் என்பாரது தொடர்பு கிடைத்தது.

**துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் :—**

துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் என்பார் திருவாவடு துறை யாதீனத்தில் எழுந்தருளியிருந்த திருக் கயிலாய பரம்பரை நமச்சிவாயமூர்த்திகளை ஞானாசிரியராகக் கொண்டவர். அக் காலத்தில் தில்லையில் கூத்தப்பெருமானுக்கு நடைபெற்றுவரும் நாள் வழிபாடு, சிறப்பு வழிபாடு முதலியன குன்றத் தொடங் கின. நடுநாட்டில் ஆட்சிப் பொருப்பாளராக இருந்தவரும் வைணவப் பற்று மிக்குடையவராய்க் கூத்தப் பெருமானுடைய வழிபாட்டில் முயற்சியற்றவரானார். இதனையறிந்த அன்பர்கள் சிவப்பிரகாச சுவாமிகளிடம் முறையிட்டனர். இக்குறையை நீக்கவேண்டிச் சிவப்பிரகாச சுவாமிகள் நடு நாட்டின் ஆட்சிப் பொருப்பாளருக்குத் தலைவராய் வேலூரில் தங்கியிருந்த இராயரைக் காணச் சென்றார். இராயருக்கு அமைச்சராக இருந்தவர் ஒரு வீர சைவர். அவர்களைக் காணச்சென்ற சிவப்பிரகாசரும் இறைவனுடைய ஆணையின் வண்ணம் தாம் வழிபடும் இலிங்கத்தையே தரித்து வீரசைவராயினர். பின்னர் பல வியத்தகு செயல்களைச் செய்து திருவண்ணாமலைக்கு வந்து தங்கியிருந்தனர். இவ்விடத்தில் சாந்தலிங்க சுவாமிகளுக்கு இவருடைய தொடர்பு கிடைத்தது. சாந்தலிங்க சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகளால் பல உண்மைப் பொருள்கள் உணர்த்தப்பெற்றுத் திருமடத்தில் தங்கி இருப்பாராயினர்.

அங்ஙனம் இருந்து வருங்காலை முருகனருள் பெற்ற வரும் எண்ணிறந்த சித்திகள் கை வரப்பெற்றவருமாகிய சிவஞான பாலைய சுவாமிகளைக் காணும் பொருட்டுப் பொம்ம புரம் நோக்கிச் செல்வாராயினர். செல்லும் வழியில் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்பாருடைய தொடர்பும் கிடைத்தது.

**துறைமங்கலம் சிவப்பிரகாசர் :—**

காஞ்சீபுரத்தில் வேளாளர்க்கு மெய்ப்பொருள் உணர்த் தும் குருவாகி வாழ்ந்துவந்த குமாரசாமி தேசிகர் என்பார்க்கு அண்ணாமலையாரின் அருளால் மூன்று புதல்வர்களும் ஒரு

புதல்வியும் பிறந்தனர். அவர்களுள் முறையே சிவப்பிரகாசர் வேலாயுதம், கருணைப்பிரகாசர், ஞானம்பிகை என்பவராவர். இவர்களது இளமைக் காலத்திலேயே குமாரசாமி தேசிகர் இறையருளிற் கலந்தனர். சிவப்பிரகாசர் இயல்பாகவே சிறந்த ஞானமுடையவர். அவர் உடன் பிறந்தவர்களுடன் திருவண்ணாமலை என்னுந் தலத்திற்கு வந்து அம்மலையினை வலம்வரும் பொழுதே **'சோண சைல மாலை'** என்னும் பெயருடைய நூறு செய்யுட்களடங்கிய நூலொன்றை இயற்றினர். இவரது சிறப்பினையறிந்த அண்ணாமலை ரெட்டியார் என்பவர் தமது ஊராகிய துறைமங்கலத்தில் ஒரு மடம் அமைத்துக் கொடுத்து அதில் தங்கியிருக்குமாறு வேண்டிக்கொண்டதினால் சிவப்பிரகாச சுவாமிகள் அங்கு சிலகாலம் தங்கியிருந்தனர். இது பற்றியே இவருக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாசர் என்னும் பெயர் வழங்கலாயிற்று

சிவப்பிரகாச சுவாமிகள் தம்பியருக்கு மணம் முடித்துத் தங்கை ஞானம்பிகையினையும் அவர்களிடத்தே கல்வி பயில வைத்துத் தாம் துறவினராய்த் தல யாத்திரை செய்யப் புறப்பட்டனர். சிதம்பரம், காஞ்சீபுரம் முதலிய இடங்களில் பலகாலம் தங்கியிருந்தனர் இவர்களால் தோத்திரமாக, புராணமாக, வீர சைவ சமய நூலாக, பிற சமய மறுப்பு நூலாக முப்பதிற்கு மேற்பட்ட நூல்கள் செய்யப்பெற்றுள்ளன பொம்மபுரம் நோக்கிச் சென்றுகொண்டிருந்த சாந்தலிங்க சுவாமிகளைத் துறைமங்கலத்திலிருந்து காஞ்சீபுரத்திற்குச் சென்றுகொண்டிருந்த சிவப்பிரகாச சுவாமிகள் வழியில் கண்டனர். இருவரும் உளங் கலந்தளவளாவியபொழுது சாந்தலிங்க சுவாமிகள் சிவஞான பாலய சுவாமிகளைக் காணச் செல்கின்றனர் என்பதையறிந்த சிவப்பிரகாச சுவாமிகள் தாமும் உடன் வருவதாகக் கூறினர். இருவரும் பல ஊர்களையும் கடந்து சென்று ஒரு நாளிரவு பொம்மபுரத்துக்கண்மையில் உள்ள ஓரூரில் தங்கினர்.

**சிவஞான பாலய சுவாமிகளைக் காணல் :—**

அப்பொழுது சாந்தலிங்க சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகளை நோக்கி 'நாம் சிவஞான பாலய சுவாமிகளைக்

காணச்செல்வதால் அவர்கள் மீது பாமாலை பாடி அவர்களது திருவடிக் கணிவித்தல் நல்லது' என்று கூறினர். ஆனால் சிவப்பிரகாச சுவாமிகள் 'யாம் மனிதர்கள் மீது பாமாலை பாடுவதில்லை என்று கூறி மறுத்துவிட்டனர். அன்று இரவு சிவப்பிரகாச சுவாமிகளின் கனவில் முருகப்பெருமான் தோன்றி ஒரு பாத்திரத்தில் மலர்களைக் கொணர்ந்து கொடுத்து, "இவற்றை மாலையாகத் தொடுத்து எமக்கு அணிவிப்பாயாக" என்றருளி மறைந்தனர். சிவப்பிரகாச சுவாமிகள் வியப்புற்று இந்நிகழ்ச்சியைச் சாந்தலிங்க சுவாமிகளுக்கு அறிவித்தனர். சாந்தலிங்க சுவாமிகள் இதனைக் கேள்வியுற்று தமதருளைப்பெற்றுத் தம்மின் வேறுபாடற விளங்கும் சிவஞான பாலய சுவாமிகளின் பெருமையையே முருகப் பெருமான் இவ்வாறுவிளக்கியருளினர் என்று கூற சிவப்பிரகாச சுவாமிகளும் மிகவும் மகிழ்ந்து சிவஞான பாலய சுவாமிகளின் மீது நெஞ்சு விடு தூது. தாலாட்டு என்னும் இரண்டு நூல்களை அருளிச் செய்தனர். பின்னர் இருவரும் சென்று சிவஞான பாலய சுவாமிகளைக் கண்டு முறைப்படி வணங்கிப் பாமாலையைத் திருவடிக் கணிவித்து நின்றனர். சிவஞான பாலய சுவாமிகள் சிவப் பிரகாச சுவாமிகளைத் தமது மாணவராக ஏற்று அருள் செய்தார்.

**ஞானம்பிகையம்மையார் :—**

சிவஞான பாலய சுவாமிகளது திருவுளக் குறிப்பின் வண்ணம் சிவப் பிரகாச சுவாமிகள் தமது தங்கை ஞானம்பிகையைச் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணம் செய்து கொடுத்தனர். பின்னர் சாந்தலிங்க சுவாமிகள் ஞானம்பிகையம்மையாருடன் பேரூருக்கு வந்து தங்கியிருந்தனர்.

**பேரூர் :—**

பேரூர், கொங்கு நாட்டுத் தலங்களுள் ஒன்று. புண்ணிய நதியாகிய காஞ்சி நதியின் கரையில் உள்ளது. கூத்தப் பெருமான் நடம் செய்யும் வெள்ளி மன்றத்தைத் தன்னகத்தே கொண்டது. மேலைச் சிதம்பரம், பிறவா நெறி என்னும் பெயர்களை உடையது. சோழர்களாலும், பாண்டியர்களாலும் திருப்பணி செய்யப்பெற்றது.

இத்தலத்தினையே தமக்குரிய சிறந்த இடமாக சாந்தலிங்க சுவாமிகள் தேர்ந்தெடுத்து அங்கு ஒரு மடம் அமைத்து அதில் தங்கி அன்பர்களுக்கு ஞான நூல்களை விளக்கிக் கூறினர். ஏனைய நேரங்களில் தனித்து நிட்டை கூடி இருந்தனர். ஒரு நாள் தமது தவமுதிர்வானும், இறையன்பானும் அடியார்க்கெளி யராம் அம்பலவாணரைப் பச்சைநாயகியுடன் விடை யூர்தியின் மீது காணும் பேறு பெற்றுர் கண்டு களி கூர்ந்து சிரமீது கரம் கூப்பி உள்ளம் நெகிழ உரை தடுமாற, விழி நீரரும்பத் தன்னை மறந்த நிலையினை எய்தினுர். தாம் கண்ட காட்சியினைத் தம் நூலுள் பல பாடல்களில் கூறியுள்ளார்.

"பிரானே திருத் தில்லையுளாய் அன்றிப் பேதையேன் முன்
ஓரானே றிவர்ந்து அம்பிகை யோடெளி தோடி வந்தாய்
வரானுே இனம் எம்மிறை என்றுனை நாடி வாடி
இரா நா யடியேற்கு எதிர் தோன்றிலை இன்றிதென்னே"

"ஆனேறு இவர்ந்து என்னெதிரே அன்று வந்தோய்க்கு
ஏனுே வெறுப்பு இப்பொழுது ஓர் சற்றிரங்கு கில்லாய்
நானுே அறிவேன் நின் பெருமையை நம்பனே நீ
தானே பொறுத்தாளு கண்டாய் என் தவறெலாமே"

"தில்லைப் பதிமேய சிவப் பிரகாசனேயோ
தொல்லைப் பிறவா நெறி மேவிய தோன்றலேயோ
அல்லற் பிறவிக்கு இளைத்தேன் தனை அஞ்சல் என்று ஓர்
சொல்லைப் பகராய் விடை மீதினந் தோன்றி நின்றே"

"சார்ந்தாய் குருவாதியவாய் விடைமீது தன்னில் வந்தாய்
கூர்ந்தாய் அருளிற் பிறவா நெறி கூட்டுவித்தாய்
ஓர்ந்தேன் குறையின் றெனினும் குறையுண்டு கண்டாய்
பேர்ந்தோடும் என்னெஞ்சில் உள்ளன்பு பிறக்கும் மட்டே"

"உவந்தாய் எனதைம்புலனும் இரிந்தோட ஓர் நாள்
தவந்தான் சிறிதும் இல்லையால் விடைதன்னில் மின்னுேடு
இவர்ந்தே வர நாளும் விளங்கிலை யென்னை கொல்லோ
அவந்தான் மிகுபாவி உன் லீலை அறிந்திலேனே"

இங்ஙனம் கண்ட காட்சியில் கருத்தொன்றி உடலசை வின்றி இருத்தலைக் கண்ட அடியவர்கள் யாதும் அறியாது வியந்து நின்றனர். சுவாமிகள் பெரிதும் விரும்பி வழிபட்டுக் கொண்டு வந்த வடிவம் கூத்தப் பெருமானது வடிவம் என்பது அவர்களது நூல்களால் விளங்குகிறது. சுவாமிகளின் பெருமை யினைக் கேள்வியுற்றுப் பல மக்கள் மடத்திற்கு வந்து அடியார் கூட்டத்துட் கலந்து சுவாமிகளால் மெய்ப் பொருள் உணர்த்தப் பெற்று நிட்டையிலிருந்தனர். இங்ஙனமாக நாளுக்கு நாள் குற்றேவல் செய்வோரும், வான நூல் கேட்போரும் நிட்டை கூடி இருப்போருமாக அடியார் கூட்டம் பெருகி வரலாயிற்று.

**மௌன சுவாமிகள் :—**

சாந்த லிங்க சுவாமிகள் ஒவ்வொரு நாளும் புதிய அடியார் ஒருவரை உடனிருத்தி உணவு கொள்வது வழக்கம். ஒரு நாள் புதியவர் ஒருவரும் கிடைக்காமற் போயினர். அப் பொழுது பேசா நோன்புடையவரும் துயிலை வென்றவருமாகிய மௌன சுவாமிகள் என்பவர் சிதம்பரத்தினின்றும் பேரூருக்கு வந்தனர். சாந்தலிங்க சுவாமிகள் மௌன சுவாமிகளை அழைத்து வந்து உடனிருத்தி உணவு கொண்டனர். அப்பொழுது தமது வீர சைவ நெறி வழுவாதிருக்க மௌனசுவாமிகளின் சடையில் சிவலிங்கம் ஒன்றை அணிவித்தனர். அது முதல் மௌன சுவாமிகளின் பரம்பரை சிவலிங்க தாரணம் பெற்றதாயிற்று என்பர்.

சுவாமிகளது அருளுடைமை, இறையன்பு, மெய்யுணர்வு ஆகிய மேன்மைக் குணங்களைக் கேள்வியுற்று அடியார்கள் வந்து குழுமினர். ஞானோபதேசம் பெறுவோரும் நூலாராய்வோ ரும் நிட்டையில் கூடியிருப்போரும் ஆகிய அடியார்கள் பலரால் திருமடம் மேலும் விளக்கமுறுவதாயிற்று. சுவாமிகள் பாடம் சொல்லும்போதும், ஏனை நேரங்களிலும் உயிர்ச் சார்பு, பொருட் சார்புகளைத் துறந்து ஒழுகுதற்குரிய நெறியினையும், நியாயங்களை யும் இன்றியமையாமையினையும் வற்புறுத்தி வந்தார்கள். இதனை யறிந்த மாணவர்களில் சிலர் தமக்குள்ளே "என்னே! சுவாமிகள்

தாம் இல்வாழ்வில் இருந்துகொண்டே பிறருக்குத் துறவறநெறியினையும், அதற்கு வேண்டிய வைராக்கிய நிலையினையும் உணர்த்துகின்றார்களே!" என வினவிக் கொண்டனர் இதனைக் குறிப்பால் உணர்ந்த சுவாமிகளும் அவர்களது ஐயத்தைத் தீர்க்கத் திருவுளங் கொண்டு ஒரு நாள் பாடம் தொடங்கியதும் ஞானம்பிகை அம்மையை அழைத்துத் தம்மடி மீதிருத்திக் கொண்டு பாடம் சொல்லியருளினார். கற்போர் இச்செயலைக் கண்டு ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றனர். அப்பொழுது சுவாமிகளும் ஞானம்பிகையம்மையும், கயிலை நாயகனும், உமையம்மையுமாகத் தோன்றக் கண்டனர். கண்டதும் சிலர் விழுந்து வணங்குவோரும், சிலர் எம்பெருமான் திறத்தில் என்ன நினைந்தோம். என்னே வாயால் பிதற்றினோம் என்றெண்ணி மதி மயங்கிச் செய்வதறியாது நிற்போரும், சிலர் தந்தை தாயனையாய் பொறுக்க, கருணை வள்ளால் பொறுக்க, சிறியேம் தவறிழைத்தலும் பெரியோர் பொறுத்தலும் இயல்பன்றோ எனத் துதிப்பவருமாயினர். சுவாமிகள் அனைவரையும் அருளால் நோக்கிக் கையமர்த்தி இனிது கூறியருளினார்.

**நூல்கள் :—**

தமக்குப் பின்னர் உலகோரறிந்து உய்யுமாறு திருவுளங் கொண்டு கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் என்னும் நான்கு நூல்களை அருளிச் செய்தார். இவை உயிர்களிடத்து அருளுடைமை, கடவுளன்பு, பாசத்தினீங்குதல், ஞானம் ஆகியவற்றை உணர்த்துவன. இந்நூல்களின் பெருமையினை அளவிட்டுரைத்தல் இயலாது. கொலை மறுத்தல் என்னும் நூலுணர்ந்து கொல்லா நோன்பும், புலாலுணவு மறுப்பும் கொண்டோர் பலராவார். இந்நூல் பல வித வாதிகளின் கூற்றையும் எடுத்து, இனி வினவுதற்கு ஒன்றும் இல்லை என்னுமாறு அவர்களது வினாக்களுக்கு விடையாக இருபத்திரண்டு செய்யுட்களான் முற்றுப் பெறுகின்றது. கொலை மறுப்பை உணர்த்தும் நூல்களுள் இது தலையானது. வினாக்களுக்குத் தரப்படும் விடைகள் எவ்வகையானும் மறுத்தற்கரியன. வினாவிற்கேற்ப, வினவுவோரின் தகுதிக்கேற்ப விடைகள் அமைந்திருக்கும் முறைமை பயில்வோரை வியக்கச் செய்யும்.

இவ்வாறே ஏனைய நூல்களும் பலவகையிற் சிறப்புற்று விளங்குகின்றன. இந்நூல்களைப் பற்றி மகான் வண்ணச்சரபம் திருப்புகழ் தண்டபாணி சுவாமிகள் அடிகளின் வரலாறு கூறுமிடத்துக்

"கூசலறக் கருணை கூட்டுங் கொலை மறுப்பும்
ஈசனது பத்திக்கினிதாம் சதகமும் பொய்ப்
பாச முழுதும் பறித்தெறியும் தீபமும் நெஞ்(சு)
ஊசல் நிகர் ஆட்டொழிக்கும் உந்தியுமாம் நூற்பெயரே

என்றும்,

பெற்றதைக் கீழாக்கிப் பெருததனை மேலாக்கும்
குற்றம் உயிரின் குணமென்றோர் பாசுரத்தில்
சொற்றனன் அவ்வாறு பல சொற்கள் உலகத்தனையும்
விற்றளித்திட்டாலும் விலை மேவா விண்டனனே

என்றும்,

எம்மதத்தில் உள்ளவர்கள் எந்நிட்டை சொன்னாலும்
சம்மதமே யாம் எமக்குத் தற்போதம் மாயிலெனப்
பொய்ம் மதத்தோர் நாணப் புகன்றருளும்-அப்புனிதன்
மும்மதமாப் போலும் முழுஞானவீரனம்மா"

என்றும் புகழ்ந்து கூறியுள்ளார். அன்றியும்

"ஆனந்த மோனம் வரும் ஆசையறு எப்பொருளும்
மோனந்த நிட்டையென முன்னம் வரும் தேனந்தும்
உந்தியார் நூறும் உதாரணத்தோடே படித்த
புந்தியார்க் கீதே பொருள்"

என மற்றொரு பெரியார் திருவுந்தியாரின் பெருமையைப் பற்றிக் கூறியுள்ளார். கற்றோர் யாரே இந்நூலின் பெருமையைக் கண்டு காமுறாதார் ?

சுவாமிகளின் நூல்களை உணர்ந்து ஒரு சில துறவிகள் "இவர்தம் நூலின்கண் புறத்துறவே அகப்பற்றைக் கெடுத்து அஞ்ஞான இருளைப் போக்கி ஞானமடைதற்குக் கருவி என்று கூறியுள்ளார். அன்றியும் துறவற நெறிகளையும் வற்புறுத்தியுள்ளார். இங்ஙனம் இருந்தும் இல்வாழ்க்கையில் இருந்துகொண்

டிருக்கின்றுரே ! இல்வாழ்வினருக்குத் துறவின் அனுபவம் எங்ஙனம் இயைவதாகும்” என வழக்கிடுவாராயினர். இதனை யறிந்து கையேட்டுத் தம்பிரான் நூலாசிரியனது நடைமுறையினை யொட்டி நூற் கருத்தும் நூற்கருத்தை யொட்டி நூலாசிரியரது நடைமுறையும் கொள்ளப் பெறுதல் உலகியல்பு. சுவாமிகள் திறத்து இது என்னையோ எனப் பலர் வழக்கிடுகின்றனர் என மொழிந்தனர். சுவாமிகளும் சிந்தித்து அனைவரையும் நோக்கி “இன்று யாம் பிச்சைக்குச் செல்கையில்முதலில் பாலன்னம் கிடைப்பின் பேரூர் எம்பெருமான் ஆணையெனக் கொண்டு துறவறம் மேற்கொள்வோம் எனக் கூறிச் சென்றனர். சென்ற இடத்தில் முதன் முதல் ஒரு ஆட்டிடையன்பாலன்னம் அளிப்பச் சுவாமிகளும் மகிழ்ந்து வாங்கி உட்கொண்டு மடத்திற்கு வந்து துறவற நெறியை மேற்கொள்வாராயினர்.

சுவாமிகள் தாம் கொண்ட துறவற நெறியில் தவருத உறுதியை உடையவராய்க் கேட்டோரும் வியந்து பணியும் வண்ணம் ஒழுகி வருவாராயினர். சுவாமிகளைக் கண்டோர்கள் அனைவரும் துறவு மேற்கொள்ளும் பக்குவ நிலையினை எய்துவர். [சுவாமிகள் ஒரு நாள் பிச்சைக்குச் சென்றபொழுது வழியில் ஓர் சிறுவனை அருளின் நோக்க, அவன் நாளுக்கு நாள் பற்று நீங்கித் துறவறத்தை மேற்கொண்டான். இதனை உணர்ந்த ஏனைய பெண்கள் சுவாமிகள் பிச்சைக்கு வருங்காலத்துத் தம் தம் பிள்ளை களை மறைத்து வைப்பாராயினர்.

**மாணவர்கள் — குமார தேவர் வரலாறு**

சுவாமிகளது மாணவர்கள் பலருள்ளும் குமார தேவர் என்பவர் மிகச் சிறந்தோராவர். இவர் கன்னட நாட்டரசர். வீர சைவ நெறியினர். முன்னைப் பிறப்பின் செய்த தவத்தின் பயனும் நல்லுணர்வு தோன்ற அனைத்தையும் விட்டு அரசைத் துறந்து அருட்குருவைத் தேடித் தலயாத்திரை புறப்பட்டனர். பல தலங்களையும் வழிபட்டு வருங்கால் சுவாமிகளின்பெருமை யினைக்கேள்வியுற்று வணங்கித் தம்மை அடிமையாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென விண்ணப்பித்து நின்றனர்.

சுவாமிகள் இரங்காது, உள்ள நிலையை நன்குணர்ந்தும் உணராதார் போன்று இவர்களுக்கு நம்மிடம் என்ன செயல் உள்ளது. மிகவும் வேண்டி நிற்றலான் எருதிற்குப் புல்லறுக்கப் போகலாம் எனக் கையேட்டுத் தம்பிரானிடம் கூற அவரும் குமார தேவரிடம் கூறினர். குமார தேவரோ இப்பணி கிடைத் ததே பெறற்கரிய பேறு என மகிழ்ந்து புல்லறுக்கச் சென்றனர். புல்லறுக்கும் போது கையும் அறுப்புண்டு இரத்தம் சொரிவதை அயலில் உள்ளவர் அறிந்து இவருக்காக அவ்வேலையைத் தாங்களே செய்து தந்தனர். இதனைக் கையேட்டுத் தம்பிரான் வாயிலாக அறிந்த சுவாமிகள் குமார தேவரை அழைத்துச் சினந்து கூறுவார் போன்று சில கூறினர். குமார தேவர் அஞ்சி ஒரு புறம் ஒதுங்கி நின்றனர். பின்னர் சுவாமிகள் குமார தேவர் பால் மிகவும் கருணை உடையவராய் இவருக்கு மெய்ப்பொரு ளினை உணர்த்தப் பெற்ற பொழுதே சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடி இருப்பாராயினர். குமார தேவரின் நிலையினை அறிந்த சுவாமிகள் 'அன்ப' நினக்கு விருப்பமாகிய ஒரு புண்ணிய தலத்திற்குச் சென்று தங்கி இருப்பாயாக என்று கூற அவரும் பேரூரினின்றும் சுவாமிகளை வணங்கி விடைபெற்றுப் புறப்பட்ட னர்.

குமார தேவர் செல்லும் வழியில், திருவாரூரில் 'வீர சைவம்மருள்' என்போர்க்கு இரதத்தை நிறுத்தி, 'அருள்' என்று அறிவுறுத்திப் பின் விருத்தாசலத்தின் நதிக்கரையில் அரச மர நிழலில் களைத்துப் போய் இருந்தனர். அப்போது பெரியநாயகி அம்மை ஒரு மானிடச் சிறுபெண் போல் வந்து ஆலயத்தில் பொற்பாத்திரத்திலே வைக்கப்பட்டிருந்த பாலினைக் கொணர்ந்து அருந்தக் கொடுத்து, "நீ இந்த இடத்திலே தங்கியிருப்பாயாக எனக் கூறி மறைந்தனர். குமார தேவர் சிறு பெண் போல் வந்தது பெரியநாயகியம்மையே என உணர்ந்து வியந்து துதித்து நின்றனர். பின்னர் அம்மரத்திலிருந்த ஒரு பைசாசத் தின் சாபத்தை நீக்கியும், காளி தேவியை நாசம் செய்ய வந்த மந்திரவாதியைத் துரத்திக் காளிதேவியைக் காத்தும் இன்ன வியத் தகு நிகழ்ச்சிகள் பலவற்றைச் செய்தும் அங்கு தங்கியிருப் பாராயினர்.

**சிதம்பர சுவாமிகள் வரலாறு :—**

ஒரு நாள் குமார தேவர் பிச்சைக்குச் சென்றவிடத்து ஒரு செல்வரின் வீட்டில் வீர சைவ சமயத்தைச் சார்ந்த ''சிதம்பர கவிராயர்'' என்பார் குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருத்தலைக் கண்டார். கவிராயரது நல்வினைப் பயனால் குமாரதேவர் அவரிடத்துச் சில வினாக்களை வினவினார். கவிராயர் விடையறியாது திகைத்தார். பின் கவிராயர் சுவாமிகளை அடுத்துப் பல நூல்களை ஓதியுணர்ந்து அவருக்கு அடிமை பூண்டொழுகுவாராயினர்.

ஒரு நாள் குமார தேவர் தமது அருட்குருவைக் காணும் நோக்குடன் கவிராயரையும் அழைத்துக் கொண்டு பேரூருக்கு வந்தனர். அப்போது விடியற்காலை யானதால் குமார தேவர் திருமடத்தின் முற்றத்தைச் சாணத்தால் மெழுக உடனிருந்த கவிராயரும் மெழுகினர். பின் இருவரும் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு வணங்கி அருள் பெற்று அவண் சில காலம் தங்கி இருந்தனர். குமார தேவர் பேரூரினின்றும் புறப் படுங்கால் கவிராயரைச் சாந்தலிங்க அடிகளாரின் அருளுக் குரியராக்க வேண்டும் என்னும் கருத்தால் ''இவன் இங்கு இருக்கலாமே'' எனத் தம் குருவினிடம் வேண்டினர். ஆனால் சாந்தலிங்க சுவாமிகளோ 'நமக்கிருக்கும் மாணவர்களே அமை யும் இவனை நீயே அழைத்துச் சென்று உண்மைப் பொருள் உணர்த்துக' என மொழிந்தனர். குமார தேவரும் குரு வினுடைய ஆணைப்படி விருத்தாசலத்திற்கு வந்து கவிராயருக்கு ஐந்தெழுத்தோதி அருள் செய்து வீற்றிருந்தனர்.

சில காலங்கழித்துக் குமார தேவரும் சிதம்பர சுவாமி களும் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு வணங்கும் பொருட்டுப் பேரூருக்கு வந்தனர். சாந்தலிங்க சுவாமிகள் சிதம்பர சுவாமி களுடைய கல்வித் திறம் முதலியவற்றையுணர்ந்து தாமியற்றிய நூல்களுக்கு அவரை உரை இயற்றச் செய்யுமாறு குமார தேவ ரிடம் மொழிந்தனர். குமார தேவர் அவற்றை வாங்கிச் சிதம்பர சுவாமிகள் கையில் கொடுக்க அவரும் மகிழ்ந்தேற்று

விருத்தாசலத்தில் வந்திருந்து உரையியற்றினர் பின் தமது குருவின் ஆணை பெற்றுத் திருப் பேரூர் வந்து சாந்தலிங்க சுவாமிகளிடம் தாம் இயற்றிய உரையைக் காட்டினர். சுவாமிகளும் தம் கருத்தின் வண்ணம் அமைந்திருத்தலைக் கண்டு மகிழ்ந்தனர். இவ்வுரை அரிய புலவர் பலராலும் நன்கு போற்றப்பட்டு வருகிறது. சாந்தலிங்க சுவாமிகள் இவ்வுரையினை ஏற்றுக்கொண்டமை அறிந்து குமார தேவர் மிகவும் மகிழ்வெய்தினர். பின் குமார தேவர் மதுரைக்கேகுமாறு சிதம்பர சுவாமிகளுக்கு ஆணையிட்டுத் தாம் பெரியநாயகி அம்மையாரின் துணையால் மகாராஜா துறவு முதலிய பதினறு நூல்கள் இயற்றி அங்கேயே இருந்து வருவாராயினர்.

சிதம்பர சுவாமிகள் மதுரைக்குச் சென்று அங்கயற்கண்ணம்மையின் அருள் பெற்றுச் சில காலம் அவண் தங்கிப் பின் திருப் போரூர் சென்றனர். அங்கே முருகப் பெருமானுக்கு ஒரு சிறந்த கோவிலெடுத்தார். திருப் போரூர் சந்நிதி முறை'யென்னும் பாமாலை பாடி முருகன் திருவடிக் கணிவித்துத் தாமும் அங்கேயே தங்கி இருப்பராயினர். (இச்சிதம்பர சுவாமிகள் ஒழிவிலொடுக்கம் என்னும் நூலுக்கும் உரையியற்றியுள்ளார்கள்.)

**இறையருளிற் கலத்தல் :—**

இவ்வாறு சாந்தலிங்க சுவாமிகளுடைய மாணவர் பரம்பரை தமிழ் நாடெங்கும் பரவி வந்தது. சாந்தலிங்க சுவாமிகள் பேரூரிலேயே நீண்ட காலம் தங்கி இருந்து மாசித் திங்கள் மகநாளன்று இறையருளிற் கலந்தார்.

**சாந்தலிங்க சுவாமிகள் அறநிலையம் :— (பிற்கால வரலாறு)**

பல வகையாலும் சிறப்புற்று விளங்கிய திருமடம் இடைக்காலத்தில் இயக்குவாரற்றுத் தாழ்வுற்றது, எனினும் அவர் இயற்றிய நூல்கள் அறிஞரிடைச் சிறந்து விளங்கினமையின் அந்நூல்களின் வாயிலாகச் சாந்தலிங்க சுவாமிகளின் பெருமையினை அறிந்து பலர் பக்தி செய்தொழுகுவாராயினர். அத்தகை

யோருள் அரசாங்க அலுவலராயிருந்த பொன்னுரங்க முதலியார் என்பாரது கனவில் சாந்தலிங்க சுவாமிகள் தாம் சமாதி கொண்டுள்ள இடத்தைக் காட்டி அருளினுர்கள். முதலியார் அவ்விடத்தைச் சென்று கண்ட பொழுது அது வெறும் கள்ளி மேடாகக் கிடந்தது. உடனிருந்தோர் 'முதலியார் கனவிற் கண்டதை உண்மை என்று நம்பினுரே'' என எள்ளி நகையாடினர் எனினும் முதலியாரவர்கள் நம்பிக்கையில் தாழ்தலின்றிச் சாந்தலிங்கா சமாதி இருக்குமிடத்தைக் கருடன் வட்டமிட்டுக் காட்டும் எனக் கூறி அகன்றனர். அவ்வாறே கருடன் ஒன்று தோன்றி வட்டமிட்டது. அவ்விடத்தை ஆய்ந்து பார்த்தபொழுது அங்கு இலிங்கத் திருமேனி இருக்கக் கண்டனர். பின்னர் அவ்விடத்தைத் தூய்மை செய்து சிறிய கோவிலும், கிணறும் சமைத்து நாள் வழிபாடு முதலியன நடந்துவர ஏற்பாடும் செய்து வைத்தார். இது நிகழ்ந்தது சற்றேறக் குறைய நூறு ஆண்டுகளுக்கு முன் எனலாம்.

அதன் பிறகு கோவைக்கு அடுத்த சிரவணபுரத்தில் கௌமார நெறியின் தலைவரும், திருப்புகழ் சுவாமிகள் என வழங்கும் தண்டபாணி சுவாமிகளது மாணவருமாகிய அருட் பெருந்திரு இராமானந்த சுவாமிகள் என்பார், கௌமார சபை அமைத்து இறைபணி செய்துவந்தார். அன்பர்கள் அனைவரும் இராமானந்த சுவாமிகளிடம் சென்று "சாந்தலிங்க சுவாமிகளின் திருமடத்தின் திருப்பணிகள் செவ்வனே நடைபெற்று வர அருள் பாலிக்க வேண்டும்'' என வேண்டி நின்றனர். அவர்களும் இயைந்து சமாதி நிலையத்திற்கு எழுந்தருளினுர்கள். அற நிலையத்திலிருக்கும் அடியவர்களை அனுப்பித் திருமடத்தின் செயலகளைத் திருவருட்டுணையால் நடத்திவரச் செய்தனர். இன்று வரை சாந்தலிங்க சுவாமிகளின் திருமடத்தின் தலைவராக அமர்ந்தோர் அனைவரும் கௌமார சபை அடியவர்களே. இராமானந்த சுவாமிகளும் பேரூரில் பல நாள் வந்து தங்கி இருந்தனர். இன்று வரை இத்திருமடத்தின் தலைவராய் அமைந்தவர்கள்

தவத்திரு இராமலிங்க சுவாமிகள்—50 ஆண்டுகளுக்கு முன்
,, மாணிக்க சுவாமிகள் —30 ஆண்டுகள்
,, ஆறுமுக சுவாமிகள் —இப்பொழுதுள்ளமடாதிபதி
,, இராமசாமி யடிகள் —இளவரசு

இவர்களனைவரும் திருமடத்தின் தலைமைப் பொறுப் பேற்குங் கால் முறைப்படி வீரசைவ தீட்சை செய்யப் பெற்று இலிங்க தாரணம் செய்து கொண்டோராவர்.

இவர்களுள் மாணிக்க சுவாமிகள் காலத்தில் மடம் மிகச் சிறந்த முறையில் முன்னேற்றமடைந்தது. மாணிக்க சுவாமிகள் அயராதுழைத்து வணிகத்திலுலும், வேளாண்மையாலும் பொருளீட்டி அன்பர்களது உதவியையும் பெற்றுச் சிறந்த கட்டிடம் ஒன்று அமைத்தார். நிலைத்த வருவாய் தரத்தக்க வழிகளையும் தேடி வைத்தார்கள். 'சத் வித்யா சன்மார்க்க சங்கம்' என்னும் பெயரில் சங்கம் ஒன்று நிறுவினார்கள். குரு பூசை விழா மிகச் சிறந்த முறையில் கொண்டாடப் பெற்றது. சாந்தலிங்க சுவாமிகள் செய்தருளிய நூல்கள் உரையுடன் வெளி யிடப் பெற்றன. சங்கத்தின் சார்பில் ஞானியாரடிகள், மறை மலையடிகள் போன்ற பலர் வந்து சமய விரிவுரை செய்தனர். இவற்றிற்கெல்லாம் உறுதுணையாய் நின்று ஊக்கமளித்தவர்கள் தவத்திரு. இராமானந்த சுவாமிகளும் அவர் மாணவர் கந்தசாமி சுவாமிகளுமே யாவர். கந்தசாமி சுவாமிகளால் சாந்தலிங்க சுவாமிகள் மீது பிள்ளைத் தமிழ் ஒன்று இயற்றப்பெற்றது. (தண்டபாணி சுவாமிகள் தாம் இயற்றிய புலவர் புராணத்துள் சாந்தலிங்க சுவாமிகளுடைய வரலாற்றினைக் கூறியுள்ளார்.)

மாணிக்க சுவாமிகளுடன் இருந்தவர் தவத்திரு. ஆறுமுக சுவாமிகள் இப்பொழுது தலைவராக இருக்கின்றார்கள். இவர்கள் மடத்தின் வருவாயைப் பெருக்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந்து மாணிக்க சுவாமிகளால் ஏற்படுத்தப் பெற்ற அறங்கள் பலவற்றையும் வழுவாது நடத்திவருகின்றார்கள். இவர்கள் தமக்குத் துணையாக இராமசாமி அடிகள் என்பாரை அமைத்துக் கொண்டார்கள்.

இராமசாமி அடிகள் என்பார் அருட்பெருந்திரு. இராமானந்த சுவாமிகளிடம் பக்தி பூண்டொழுகும் குடும்பத்தில் தோன்றி இளமை முதலே அவர்களின் அருள் நோக்கிற்கு உரியாராய்க் கௌமார சபையில் தொண்டாற்றி வந்தனர். கந்தசாமி சுவாமிகளிடம் முறைப்படி பாடங் கேட்டவர். துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளுக்கு ஞானசிரியராக அமைந்த சிவஞான பாலய சுவாமிகளின் மரபில் வந்த பதினெட்டாம் பட்டத்துச் சுவாமிகளின் அருள் நோக்கிற்கு உரியவர். அவர் களாலேயே வீர சைவ தீட்சை செய்விக்கப் பெற்றவர். இவர்கள் காலத்தில் சாந்தலிங்க சுவாமிகளின் அறநிலையத்தி கல்விப் பணி நாளுக்கு நாள் முன்னேற்றமடைந்து வருகிறது. பேரூரிலும் காட்டம்பட்டியிலும் உயர் தொடக்கப்பள்ளி நடத்தப் பெற்று வருகின்றது. தமிழ் வளர்ச்சியில் பெரிதும் நாட்டங் கொண்டு "தமிழ்க் கல்லூரி" ஒன்று சென்னை பல்கலைக் கழகத் தின் ஒப்புதலுடன் நடைபெற்று வருகின்றது. இராமசாமி அடிகளின் இடைவிடா உழைப்பாலும் கோவை நகரப் பெரு மக்களின் உதவியாலும் இப்பணி நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றது. இப்பணியில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள் சைவத் திரு. வெ. சி. சுப்பைய கவுண்டர் அவர்களும், கோவைக் கிழார் இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களும் காலஞ் சென்ற இரா. க. சண்முகம் செட்டியார் போன்றவர்களு மாவார். இந்த அற நிலையத்தில் பயிலும் மாணவர்கள் தமிழ் அறிவுடன், சமய அறிவும், மக்கட் பணி உணர்வும் ஊட்டப் பெறுகின்றனர். பொதுவாகக் கூறுமிடத்து இந்த அற நிலையம் கோவை வட்டாரத்தில் ஒரு சிறந்த சமூக நிலையமாகப் பணி யாற்றி வருகின்றது. தமிழ் நாட்டின் சமய மறுமலர்ச்சி கருதிப் பாடுபட்டு வருகிறது எனக் கூறலாம்.

**முடிவுரை ;—**

இவ்வளவு சிறப்புடைய அறநிலையம் மேன்மேலும் வளர்ந்து பல துறைகளிலும் நாட்டிற்கும் சமயத்திற்கும் நல்ல பணி புரிந்து பன்னெடுங்காலம் விளங்கத் தவத்திரு சாந்தலிங்கப் பெருமான் தண்ணருளை வேண்டுவோமாக.

முற்றும்.

# பதிப்புரை.

'கொலை மறுத்தல்' என்னும் இந்நூல் பேரூர்ப் பதியில் மெய்ந் நெறி காட்டி விளங்கும் தவத்திரு. சாந்தலிங்க அடிகளாரால் இயற்றப் பெற்றது. இந்நூல் பலராலும் முன்பு பல பதிப்புக்களாக வெளி வந்துள்ளது. எனினும் நிலையத்தின் பதிப்பாக தவத்திரு. மாணிக்க சுவாமிகளால் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் என்னும் நான்கு நூல்களும் வெளியிடப் பெற்றன. இப்பொழுது அந்நூல்கள் கிடைப்பதரிதாய் விட்டமையால் மீண்டும் நிலையத்தின் பதிப்பாகக் 'கொலை மறுத்தல்' வெளி வருகின்றது. ஏனைய மூன்று நூல்களையும் தொடர்ந்து விரைவில் வெளியிட முயல்கின்றோம். இப்பதிப்பில் இங்கும் அங்குமாகச் சில பிழைகள் நேர்ந்துவிட்டன. அவற்றைப் பிழை திருத்தமாகத் தொகுத்துச் சேர்த்துள்ளோம்.

இந்நூல் வெளிவர உறுதுணை புரிந்த வேளாள அச்சகத்தினருக்கும் ஒப்பு நோக்கிய கல்லூரி ஆசிரியர்களுக்கும் நிலையத்தின் சார்பாக நன்றி தெரிவித்துக் கொள்ளுகின்றேன். ஏனைய நூல்களும் விரைவில் வெளிவர இறையருளையும் அன்பர்களது துணையையும் வேண்டுகின்றேன்.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடம்
பேரூர்
விளம்பி ஆண்டு, மாசி, மகம் நாள்.

அன்பன்,

**இராமசாமி**